W. Annamalai Pillai
4-10-'36

உ

சிவமயம்.

ஸ்ரீசம்பந்ததீர்த்தசரணுயகமஃ.

# காமரசமஞ்சரி.

சந்திரகுலமகாராஜராகிய
எட்டயபுரம்
சமஸ்தானத்து ஆதீனகர்த்தர்
ஜெகவீரராமவெங்கடேசுரஎட்டப்ப
மகாராஜ ஐயனவர்கள்பேரில்
ஷை சமஸ்தானத்திலிருந்த
புலவர்திலகராகிய

**கடிகைமுத்துப்புலவர்**

பாடியது.

இஃது,
மேற்படிசந்ததியில்
இப்போதுபட்டாபிஷேகராக
எழுந்தருளியிருக்கும்,
**ஜெகவீரராமகுமாரெட்டமேந்திர**
ஐயனவர்கள்உத்தரவின்படி
ஷை சமஸ்தானம் மகோவிர்த்தி டிப்பார்ட்மெண்டு ஏஜெண்டு
கோ - வெ, எட்டப்பபிள்ளையவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பட்டது.

Madras:
PRINTED AT THE CITY PRESS.
No. 16, Thumboo Chetty Street,
1879.



உ

சிவமயம்.

# சாத்துகவிகள்.

எட்டயபுரம் சமஸ்தானம்

வித்துவான்

**கடிகைநமசிவாயப்புலவர்**

இயற்றியது.

## ஆசிரியவிருத்தம்

பூமேவுமேருமணிசிகரமாலசெண்ட
பொருத்தலின்விடத்துறுதலின்
புணறுயுறுத்தலிற்பின்னைமறுவுறலிலைய
புனையொவாப்புனையிலாத
பொருப்பமிருசொடைக்கத்தவீரமூலகோபப்புதல
பொருந்திவளாப்புநட மேருப
புருடாதநமபுருட சிகரமபருடோத்தயன
புருடோத்தமன்னிவனெனக
கோமேவுசந்திரகுமொரினற்சிலலவார
குலமியற்றிடவேனக

கோடிபுண்ணியபலமுமொன்றாய்த்திரண்டுருக்
கொண்டருளும்வச்சிரதேகன்
குணசுகுணநவமணிப்பூடணாலங்கார
கோலாகலசவுந்த்ரன்
கொடையளிநடாத்துசெங்கோன்மைகுடியோம்பலிக்
கொள்கையேபுரியுநேமன்
மாமேவுமெட்டபுரமாதிக்கநாடொறும்
வளர்ந்தேறவந்தசெல்வன்
மகாபிரபலம்பெறுஞ்செகவீரராமக்கு
மாரெட்டமேந்த்ரபூமன்
மாமதிதனாலெலாப்பொருளையும்விளக்கல்போல்
வம்மிசாவழியில்வந்த
மகிமைகளனைத்தையுந்தன்மதிதனால்யார்க்கு
மகிழ்வுறவிளக்குவான்போற்
றேமேவுதென்னிளசைவெங்கடேசுரவெட்ட
தெய்வேந்த்ரன்மீதுமுன்னாட்
ஜெகமெச்சுகடிகைமுத்துப்புலவனெனும்வித்வ
சிரோமணியினாலியற்றும்
சிந்தைநாவூறுகாமரசமஞ்சரியதாந்
இவ்யப்ரபந்தமதனைச்
சென்னைமாநகரிலச்சிடுவித்துலோகப்ர
சித்தமுண்டாக்கினனே.

சுபமஸ்து.

சென்னை,

வேதாகமோக்தசைவசித்தாந்தசபையின்

அடியார்களிலொருவராகிய,

ம - ள - ள - ஸ்ரீ,

## வித்வான், திரு-வி, சிவப்பிரகாசையரவர்கள்

பாடியது.

## ஆசிரியவிருத்தம்.

பூமகளுநக்ககணிவதனமெனத்திகழுந்தென்னிளசைபுரக்கும்வாய
மாமருவுஜகவீரராமவெங்கடேசுரவெட்டேந்திரன்மேல்
பாமருவுகடிகைமுத்துப்புலவனருங்கற்பனையாப்பகருஞ்சீர்கா
மரசமஞ்சரியைக்குமாரெட்டனச்சியற்றிக்காட்டினனால்.

---

ஷை சபையடியார்களிலொருவராகிய

ம - ள - ள - ஸ்ரீ,

## வித்வான், கு - குப்புசாமிஆசாரியவர்கள்

பாடியது.

## ஆசிரியப்பா.

பொன்மலிகற்பகப்புத்தேள்வழுத்து
மெண்ணருஞ்சீர்சாலிசைநிறீஇயுலகை
யாண்டருள்வரோதயனம்பலத்துழுக
னடிமலர்க்கன்புறுதுலர்ச்கிரங்கி
வளையாதளிக்கும்வள்ளலாம்வெங்க
டேசுரெட்டேந்திரனெட்டயபுரத்தி
லேர்கவிற்றிருக்குமாரெட்டைதன்பா
லன்புமீக்கொடுபுலவர்க்கரணுமெனு
முழுதுணர்கடிகைமுத்துப்புலவ
னியற்றியன்காமரசமஞ்சரியென்
ஞெருநூலதனையோதுமவ்வேந்தல்
குடிமாபில்வருகுமாரெட்டேந்திர
மகிபனிவ்வுலகின்மாண்பெறவச்சிடு
வித்தனன்யாரேவியவாதவரோ.

உ

சிவமயம்

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧ | ௫ | சிர்த்தி | கீர்த்தி |
| ௨ | ௨௰ | லோட்டினன் | லோடினன் |
| ௩ | ௬ | ணைரிய | ணைறிய |
| ௩ | ௧௬ | வென்பரல்லா | வென்பதல்லா |
| ௪ | ௪ | வெங்டேசு | வெங்கடேசு |
| ௫ | ௭ | முயர்வாழ் | முயர்வாற் |
| ௭ | ௰ | தொக்க | தொந்த |
| ௮ | ௭ | பின்றனை | பின்றனை |
| ௮ | ௮ | தன்றனை | தன்றணை |
| ௮ | ௧௨ | பூலேக | பூலோக |
| ௯ | ௧௧ | காமின்ட | கர்மின்ட |
| ௯ | ௧௬ | சுரதரணை | சுரதாணை |
| ௰ | ௧௪ | மண்டில | மண்டல |
| ௧௧ | ௮ | புகல்வோ | புகலவோ |
| ௧௧ | ௯ | மானிறத்தாற் | மானிறத்தார் |
| ௧௩ | ௧௧ | கன்மா | கண்மா |
| ௧௫ | ௬ | மீருமலர் | மீறுமலர் |
| ௧௫ | ௮ | பார்க்கு | யார்க்கு |
| ௧௫ | ௧௭ | வா | வர |
| ௧௬ | ௭ | தன்றே | தென்றே |
| ௧௬ | ௰ | யாஞ் | யரச் |
| ௧௮ | ௧௫ | மிணைத் | மிணைங் |





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீசம்பந்ததீர்த்தசரணயநம:.

# காமரசமஞ்சரி.

காப்பு.

இக்கிலங்கொண்டாடும்வெங்கடேசுரெட்டமேந்திரன்மேன்
மன்னிவளர்காமரச மஞ்சரிக்கு - மின்னுமுடிக்
கம்பகும்பத்தானையொருகையில்வைத்துப்பந்தாடுங்
கம்பகும்பத்தானைமுகன்காப்பு.

நூல்.

பார்பூத்தபேருதாரத் தெய்வப்பரந்தாமன்
கார்பூத்தவேலைகடைந்தநாட் சீர்பூத்த

செய்யதிருவுடனேதெள்ளமுதம் வந்துதிக்கத்
துய்யமதிமேலாகத்தோற்றுதல்போல் வையகத்தைத்

தாங்குந்தியாகசமுத்திரத்திற்கீர்த்தியென
வோங்குநிலவுமுதித்தருளப் பாங்குடனே

அந்தப்புலவர்க்கவனமுதமீந்ததுபோ
லிந்தப்புலவர்க் கிவனுதவ வந்தனு

லெங்கள் துரைச்சிங்கம்வெங்க டேசரெட்டமேந்திரனே
செங்கண்முகிலாகவந்து சென்மித்தான் பைங்கமலை

மாலவனைச்சேர்ந்தாள் மறுவென்பார் தாமரையின்
மேலமரில்வண்டு விழுமென்பார் சாலவே

எண்ணித்தவமபுரிந்து மெங்கோன்செழுங்கமலக்
கண்ணிற்குடியாய்க்கலந்திருந்தாள் வெண்ணிறத்தாள்

மூந்தவேமேனிமுழுதும்வெள்ளையாயோட்டந்
தந்தத்தினல்வேதனையே சார்ந்திருந்து மிந்தப்

பிரமனையேசேர்ந்ததினற் பேறுபெற்றதென்ன
விரவியபாட்டுக்கிடமாய்மேவித் திரிவதென

வாணிதவம்புரிந்து மன்னர்பிரானன்னாவிற்
காணியெனவந்திருக்கக்கண்டோமே பூணு

மறங்கொண்டுவிந்தை மலைவாயிருந்துந்
திறங்கொண்டகல்வெதுப்பவுசெய்ய வுறைவதனைச்

சொலவதென்னமாலாற்றுவளாயலையிருக்கச்
செல்வமடமங்கைதவஞ் செய்ததினல் வில்விசய

னம்புயக்கண்மேவினனொன்றுங்கேவிசயமங்கை
யம்புயத்தின்மேலேயாயிருந்தா ளம்புவியிற்

பாரியடித்துப்பரித்தான்குருணையென்போ
னரிலிராமற்காட்டிலோட்டினன் சீருடைய

கன்னனென்றுமில்லையென்றுகையைவிரித்தானுறந்தை
மன்னன்புலவர்மேல்வாளெடுத்தா னிந்நிலத்தி

லார்கொடுப்பவரொன்றாராய்ந்து தென்னிளசை
யூரேபுரந்தோனுலகளந்தோன் பாரேழு

மேந்தவளர்ந்தபுயத்தேந்தலெங்கடேசுரெட்டன்
மாந்தர்தமைப்புரக்கும வள்ளலெனச் சாந்தமுலைத்

தானத்திருப்புகலாய்ச் சாந்துமெங்கோன்கைவனசத்
தானத்திருப்பிடமாய்த்தானிருந்தா னாறிய

வாரிமாலும்பயங்கொண்டாத்தகடல்வாய்ப்புகுந்தான்
வாரியாய்ச்சேரனமலைபுகுந்தா ளேதுங்காற்

காப்பிடுவாரில்லாமற் கன்னமை பேய்க்கருசியன்றே
வேப்பிலைபைததான்கமந்தான்மீனவர்கோன் வாய்ப்பெ
(ளவே

மல்லாடிமாற் றவரிற்சோரா தாங்கடிக்கும்
புல்லாவலாலெடுப்பார்புற்கொடியை யெல்லாரு

மச்சமுள்ளாரொன்றேயறிந்ததயிரியமா
னுச்சமெனநங்கோனுளத்திருந்தான மெச்சு

தவம்புரியுமோனிசவுபரியாங்கிருஷ்ண
னவன்பிரமசாரியென்பதல்லா லிவர்கள்பெற்ற

மைந்தரனேகரென்பார மைந்தர்பெற்றபிள்ளைகளா
ரந்தமரபுமறியோமோ விந்த

நிலத்துக்குள்ளாரை நிகருரைப்போமெங்கோன்
குலத்தைத்தொட்டென்றுங்குறிக்கப் பெலத்துடனே

சென்மமகப்பேறாய்ச் செனித்தவெங்கடேசுரெட்ட
தன்மதுரைகொடுக்குஞ்சந்தான நன்மைதரு

மொன்றேமகவாயுதித்தி லெட்டுப்போரகு
மென்றேவளருமியல்பினை னன்றேயாம்

பந்தானென்றறிந்துபார்த்துதரதானத்திற்
சந்தானமா துதரித்திருந்தா , ணைந்தாந்

திசையறியராகவனுந் தேவிதனைத்தோற்றான்
விசையனுமோபேடியாய்விட்டான் புசபலத்தான்

மல்லுந்துவீமன்மடையன் விக்ரமார்க்கனென்றுஞ்
சொல்லுங்குயவனுக்குத்தோற்றனே தொல்லுலகில

கொற்றமனவீரங் குறித்தாலிவ்னையல்லான்
மற்றவரைக்காணே மறுத்தென்ன வுற்ற

கருங்கலையூர்திகருக்கோட்டைவேந்தன்
மருங்கிற்குடியாய் வளர்ந்தாள் பொருந்தியே

மாயன்கடல்கடைந்தமாத்திரத்திலாலம்வந்து
காயமனதுகலங்கியே தூயமதி

பின்னேயொழித்தான். பெலமுஞ்சவுரியமு
மென்னேயவன்படைத்தானென்பதினை முன்னாளில

வந்தவொற்றையாலமருளும்பகைதடிந்தான்
வந்தவீராலமருங்கமைத்தான் சந்ததமு

மஞ்சாதவெற்றியதுலன்வெங்கடேசுரெட்டன்
மஞ்சாருஞ்செங்கைவளத்தினை னெஞ்சாத

துன்றுபுகழாளி தொடையேயிடமாகு
மென்றுசவுரியமானெயதினை னன்றிதர

வாய்ந்தவெங்கடேசுரெட்டன்வாய்த்தவட்டலட்சுமியுந்
தோய்ந்தகணவனெனத்தோன்றிரு ளுய்ந்துரைக்கிற்

காட்டுமுறையிடமேகஞ்சஞ்சாரத்திடமே
யீட்டுதலாற்கும்பமுனியெய்திடலா லோட்டத்திற்

சாருங்கலைமானைத்தாங்குவனப்பாலதனாற்
சேரும்புயங்கரகனு சேர்ந்திடலாற் பாரமா

யுன்னும்பூமேலாமுயர்வாழ்பிரமனைப்போன்
மன்னும்பொதியமலையினன் றுன்னியே

கங்குகடாவுதலாற்காருருவநீடுதலா
லங்குவளைபாணி யுமைதலால் பொங்கியே

சக்கரமேதாங்குதலாற்றண்டலைக்கொண்டேந்துதலான்
மிக்கவுரங்கொண்டதிருமேன்மையாற் றக்கதெனச்

சிந்துவாரத்தொடம்பு சேரத்தரித்திடலா
லந்தமால்போலும்வையையாற்றினன் சந்ததமுஞ்

சங்காரஞ்செய்வனவாற்றுமனையுந்தாங்குதலா
லங்கார்முடிக்காரமைத்தலான் மங்காத

சீலக்களம்பரிக்குநீர்மையாலம்பலஞ்சச்
சூலபபடைகிடக்கத்தோற்றுகையான் ஞாலத்திற்

கூட்டுபண்ணையேசாது கொண்டவளத்தாற்சிவன்போ
னாட்டுமுதுகுடிநன்னாட்டினன் வீட்டின்மணி

மேடைதொறுங்காரை வெண்மைதருங்காரை
யாடையெனச்சுற்றுமணங்காரைக் கூடவெடுத்

தேந்துசினகரமே யெந்துமினகரமே
சாந்தமுறலையார்க்குஞ் சக்கரமே மாந்தரொன்பா

ராருமனோரதமே யானைபரிமாரதமே
பூருமிளைசையெனு மூரினான் பாரதனிற்

கற்புடையாள்வந்ததுவுங் காண்மிடித்தகற்பாலே
கற்புடையாளாதல் கருதாரோ கற்பாலே

வேட்டிருப்பதாசைகொண்ட மின்னாரோவென்றறிந்து
தோட்டிருப்புமுல்லைத் தொடையினான் கூட்டமிட்டுச்

கோரம்புரிந்திருக்கோரம்பரவேலைக்
கோரம்புகவிடலாற் கோரமாய் நீரிசைய

வட்டமிடுவாரியைத் தவட்டமருவார்களைக்கு
வட்டமையவிட்டகன வட்டமாய்த் திட்டமாய்க

குந்தமேற்கொண்டுமெதிர்க்குந்தமாற்றானையும்வை
குந்தமேற்றப்பொருதகுந்தமாய் முந்தமுந்தக்

கந்துகம்போற்றாவியும்பல் கந்துகமோதிக்குதித்துக்
கந்துகமேற்றாவுதலாற்கந்துகமாய்ச் சிந்துவையும்

வாரம்பரிக்குமிணைவாய்த்ததெனவேபுவன
பாரம்பரிகரும் பரியினா னீரிணைத்துந்

தும்பிக்கைநீட்டத்துதிக்கைதுதிக்கையென
நம்பிக்கைகெட்டு நடுநடுங்கி வெம்பிக்

கறையடியைத்தூக்கிவருங் காண்மயங்கிநெஞ்சம்
பறையடிக்கமாற்றார் பதுங்கக் குறைவில்லா

வீரகன்னடைபாததண்டைவீறுகொண்டவோசைகண்டு
சேருமண்டகூடபந்துசேரவிண்டுபோர்மருண்டு

காரடைந்தவாரியொன்றுகாலடர்ந்ததாளடைந்து
சேரமண்டியாயுளம்புசேறளைந்துதூரவும்பர்

நாடடங்கவேலையண்டர்நாதனுங்கண்மூடியஞ்ச
ஓடிருந்ததேவரம்பையோரிரங்கவாடல்கொண்டு

சக்ரவெற்பைமுட்டியுக்ரசத்துருப்படைச்செருக்கை
நிக்ரகித்துவட்டமிட்டுநெற்றிதொட்டகைக்குமெட்ட.

வெட்டியக்கதிர்ப்பரப்பையப்புறந்திமுக்கமுட்டி
முட்டிமத்தகத்தலெற்றிமுட்டைதட்டிவிட்டதொத்து

தெட்டுவெற்புமட்டநிக்குபெய்யடிப்பிறைப்பதப்ப
கொட்டமிட்ட துட்டனைக்குமைத்துவிட்டுவிட்டதொக்க

வென்றுநடுங்கினதிந்தநெடும்புவி
நன்றிபுரிந்தவர்நம்பினர்துன்றியு

மின்பநுகர்ந்தனரெங்கும் வளர்ந்தன
ரன்புபுரிந்தனரஞ்சலிர்பின்பென

விந்திரனேரொன்றதுரையிந்தவகைவென்றுவெற்றி
தந்திடமேலோங்குமததந்தியினு          னந்தரத்தைப்

பொன்னகருடன்பொதிந்துதலைநீட்டுமெனச்
சொன்னகருடத்துவசமே          முன்னிலையா

யெட்டியசந்திரனை யேற்றுசந்திரகாவியிடால்
கட்டிமிகவிருதுகட்டினேன்          கெட்டியாய்த்

தையலர்பூமாலிகையுந் தண்டமிழ்ப்பாமாலிகையும்
வையந்தொழும்வாகைமாலிகையு மையமின்றி

யிம்முறையேகொண்டுவரவென்றுலகஞ்சொல்வனபோ
முமமுரசுமார்க்குமணிமுன்றிலா னம்முடைய(ன்

கண்ணப்பதேசிகனைக் கையெடுத்துச்சாத்தூர்வாழ்
வண்ணட்புயலைமன தில்வைத்துத் தண்ணளியாற்

பின்னனையம்புபிடித்தவனும்பின்வாங்கத்
தன்னனையம்புவிக்குத்தந்தருள்வோன் முன்னாட்

கருமைக்கடன்மானின்கால்கண்மராவாகாய்த்
திருகுமிராவணனார்சென்னி பெருகுதொகை

யொன்றுநான்சேழுபத்துக்கோர்கணைதொட்டெய்தபிரா
னென்றுபூலோகமியம்பவே வென்றிதருங்

கொற்றவிசயக்குமாரவெட்டன்செய்தபலன்
முற்றுமுளையாய்முளைத்தருள்வோ னுற்ற

வரியரவின்மேற்பாந்தமண்டலத்திற்செங்கோ
லுரிமைசெயுநாளிலொருநாள் விரியுஞ்

சுதையடித்துச்சுற்றுச்சுவர்த்தலத்தின்முத்த
மதைநிரைத்தகோவையமைத்துப் புதியமணி

வச்சிரத்தூணட்டிவடிம்புமதனாலேற்றி
யுச்சிமுகப்புமதாலுண்டாக்கி நிச்சயமாய்

வெள்ளித்தகடுக்கிவேய்ந்தகொலுமண்டபமே
பள்ளித்திருமாயன்பாற்கடல்போ லுள்ளிணங்கி

யெயுநிலத்தளத்திலிட்டமாகதமே
பாயுமொளிபரக்கப்பச்சிலையாய்த் தோயு

மருகிடையிற்கோவையமைத்தரத்னநீலங்
கருவளையம்போற்படர்ந்துகாட்ட வுருவாம்

பதுமராகத்தைப்பதித்தமைத்தபீட
மதுமலர்ச்செந்தாமரைப்பூமான வதனில்

வனசமங்கைவீட்டினெடுமொலிருந்தாற்போலு
மெனதுவெங்கடேசுரெட்டமேந்திரன் சனநிபுணர்

காந்தனிரவிகுலகஸ்டீரவனரசர்
வேந்தனமதுதுணைவீற்றிருந்தான் சேர்ந்த

வுரகண்டகரீமிண்ட வுத்தண்டவந்தம்
பரகண்டகந்துகரோபந்த சரச

கெருவிதமனோகரசங்கீதபரிபால
பருபதநிரபுயபார மருவலைாத

தத்தளிக்கவெட்டுமுச்ரசங்காரருத்ரரண
சுத்தவுரிகோலசுரதரண விதவசன

சங்கமுழுங்குபிரசங்ககாம்பீரசக்ர
சங்கதரவிசையசங்கிராம துங்க

கமலவிமலகணவசுமுக
வெமதுவெங்கடேசுரெட்டமேந்த்ரா நமது

வழுதிதிருபம்வரைதோறுங்கொற்ற
மெழுதும்வெங்கடேசுரெட்டமேந்த்ரா தொழுது

திசைபுகழுமைவருக்காச்செட்டிவருந்தூதுக்
கிசையும்வெங்கடேசுரெட்டமேந்த்ரா வசனங்

கனியரசமொழுங்கல்வித்தமிழுக்
கினியவெங்கடேசுரெட்டமேந்த்ரா தனதா

விதுரசதுரமதவெற்பனைக்குமுன்னே
யெதிரும்வெங்கடேசுரெட்டமேந்த்ரா வதிரும்

மலையைச்சிறகரிந்தவச்ரதராசோமத்
தலையைப்புனைந்தசரணு மலைவிலா

வீரவிக்ரமார்க்காவிசையாசமரமுக
சூரவுக்ரவாக்கிணைசுக்ரிவா தீரகன

யோகமகிபாலபெரியோர்களனுகூலவென
மாகதருங்கட்டியரும்வாழ்த்துரைக்க வாகனையார்

கொண்டுவந்தகப்பமிந்தக்குப்பமிதுமெய்ப்புரவி (திற்
கண்டுவந்துகொள்கவெனக்கையெடுப்பார் மண்டிலத்

கைக்களிற்றுக்கொட்டிரட்டிகப்பமிட்டாரிழுத்தார்
மக்காமுத்துமாலைவரவிட்டா ரொக்கக்

குருதர்மலையாளர்கொண்டுவந்தகப்பம்
வெகுவரிசைசீபூர்க்கவேணு மகராச

ராசவிகவாசரகுராமவெனவேயுரைக்கப்
போசனிருந்தகொலுப்போலிருந்தான் தேசங்க

ளெண்ணேழும்வாரிதிகளெண்ணேழுமெண்டிசையு
மண்ணேழுமொன்றாய்வதிந்தனபோ லுண்ணேயங்

தந்தபரிசனமுந் தன்னிளையுமற்றவரும்
வந்ததுரைமக்கள்புவிமன்னவரு மிந்தத்

தரணிக்கதிபதிகடானுபதிகள்
கரணிக்கர்மிக்கதளகர்த்தர் வரிசையா

யாங்கிருக்கவேற்றரசரப்புறத்திற்காத்திருக்கப்
பாங்கிலுரியசனம்பற்றிநிற்க வோங்குபுகழ்

மன்னனிருந்தகொலுமண்டபத்துக்குள்ளிருந்த
பொன்னனையார்செய்திபுகலவோ முன்னிசைந்த

வெள்ளைப்பளிங்குநிலமேலிருந்த மாணிறத்தார்
பிள்ளைப்பருவப்பெடையனமா முள்ளபடி

நீலந்தளத்திருந்தநீலக்கருப்பிகளுமா
மேலமருங்கோகிலம்போல்வீற்றிருந்தார் சாலவே

பச்சைநிறப்பீடிகைமேற்பச்சைநிறத்தார்காவி
லிச்சையுடன்மேவுமயிலென்றிருந்தா ரச்சபையிற்

செய்யமணிவேதிகையிற்சேர்ந்தசிவப்புமின்னு
ரையமில்லாச்செந்திருவொப்பாயிருந்தார் பொய்யலவே

வாராட்டுகொங்கைமடமாதொருத்திபெங்கோன்மேற்
பாராட்டுசெந்தமிழைப்பாடினாள் போராடி

விம்மவிலையேயிடைநுமெய்யுமசையவில்லை
யம்மகுழைபிரண்டுமாடவில்லை மைம்முகில்போற்

கொண்டைகுலுங்கவில்லை கொவ்வைதுடிக்கவில்லை
சண்டையிடுங்கெண்டையெங்குஞ்சாயவில்லை கண்டது

ளிபபடிக்காணேம்படிப்பாரொன் றுரைக்கப்பாடிறு
ளபபடிக்கும்பெண்களனேகருண்டே மெய்ப்புடனே

நாட்டியஙகள்செய்யவும்பர்நாட்டியங்குவோராகளுமந்
நாட்டியங்கிறுரிவர்கண்ணுட்டியரோ ' பாட்டியஙகு

பாதமிதித்தாளமுந்தபபாதமொழித்தாளமுமப
பாதமிலொபபாங்விரும்பாதவரா ரோதமிலாக்

காற்றுடிபோற்சுழலுங்காற்றுடியாமெதன்
காற்றுடியென்பன்விசைக்காற்றனே மேற்றுவத்

தேவரம்பைமாருமலைத்தேவரம்பைமாறுமெனத்
தேவரம்பெற்றென்னகண்டார்தேவொன்பார் பூவுலகிற்

காணுமிவ்வாறிவருக்காணுமயஙகும்வண்டு
காணுமெனபபதத்தைக்கண்டேரோ பூணு

டலமபுருசிலம்புமணிசதங்கைக்கொத்தும
புலமபுமெனக்கண்டோரபுகல்வாா நலமபுரியும

பாட லதிகமென்பாரல்லாமற் பாாத்தவாக
ளாடலதிகமிவளாமென்பா ராடல

புரிநததிலும்பாடன்மிக்காய்பபூவையர்தேனமாரி
சொரிந்தவிசைமிக்கெனவேசொல்லத் தெரிந்தவொரு

வீணையெடுத்தொருத்திமீட்டிறுரைதனா
வீணையுரைக்கவென்றேவிண்புகுந்தார் நாணியே

தமபுருவுமீசன்றுளைச்செவிக்குள்ளேபுகுந்தா
னம்புவியிலாரைநிகராயுரைப்போ மிம்பரிலே

இந்திரவோலக்கமன்றோவெங்கள்வெங்கடேசுரொட்ட
சந்திரகிரிவேந்தன்சமுகமே வந்துவந்து

ருத்தாரங்கட்பயமிட்டுமுன்பணிவோர்தங்களபுவிக்
குத்தாரங்கேட்பதொருபாங்கா பத்தானை

கப்பமிடுவோர்நிலைமைசாட்டளையிட்டேசிட்டுக
கொப்பமிடசொல்லவதொருபாங்க ரிப்படியே

கேவலைபுடைசூழ்ந்தபுவியேலரசாநமிவோர
வோலைதரச்சொல்லவதொருபாங்கா சால

நெருங்குங்கொலுவிலிலமகளுமபொன்று
மருங்கிருக்கச்செயபொன்மலைபோற பெருஞ்செலவ

மோங்குபெருமானுவந்திருந்துருமபமுலை
காங்குமடவார்தமைநோக்கிப பாங்கிருந்த

மைதவழுங்கண்மடவீர்மாமலர்பூஞ்சோலைதனி
லேவிளையாடுவோமெனறுரைத்தான் கைதொழுது

பார்தாசனும்பிறநவர்தாலந்தனக்குச
சீதளப்பூம்பொழிலிற்ப்பென்று ரோதி

யெழுந்தான்மருப்பிசையேந்தியொன்றாகையாற்
றிழுந்தானைபப்பாமடந்தைதொட்டா ளெழுந்தவே

வண்டுபடியுமகுவளையைபபாகாசென்று
கொண்டுவருகவெனக்கூறினான் றண்டு

முடிக்குட்புவியையடக்கிநெடுவானை
பிடிக்குமிருகோட்டியானை பிடித்துப்

புடவிக்குளெட்டுப்பொருப்பையுந்தூளாக்கிக்
கடலேக்கலக்குங்களிறு இடறி

யிடதவளையைநிலத்திற்புரட்டுங்
கடகரடமூற்றிறைக்குங்கைமாத் . தடவிகடக்

கொம்பிரண்டுமூன்றாகக்கொண்டதுபோனெற்றியினு
ளம்புலியைத்தீண்டுமேரகவா விம்பரிலே

பாகர்திருத்தும்பருத்தமதயானைதனே
மேகமெனக்கொணர்ந்துவிட்டார்க ளேகமாய்க்

கொம்புமுரசுங்குமுகுமெனப்போர்விசயக்
கொம்புந்திருவுநின்றுகூத்தாட வம்புவியை

யாளும்பெருமா னயிராவதத்தரசும்
வேளுஞ்சமானமெனமேற்கொண்டா ரொரு

மலேயைக்கவிந்துவருமாமயில் போற்கும்ப
முலேயைச்சுமந்தமின்னார்மொய்த்தார் நிலவரமாய்த்

தண்டிகையிலேறிவருந் தையலர்செந்தாமரைமேற்
கொண்டிசையுறுசெம்பொற்கொடியானார் கண்டபிற

நாகமிசையிருந்த நாரியரெல்லாருமலே
மேகமிசையிருந்தமின்னாரு ராகையினு

லேயும்பரிமேலிருந்தமின்னார்பாற்கடலி
லாயுந்திரைமேலனமானார் தேரயிரத

மானகோலாறுவண்டியாங்கிருப்போரிந்திர வி
மானமேற்றேவரம்பைமாரானார் தானும்

பதுமமலர்மங்கையைப்போற் பாவைநல்லார்சூழ
மதுமலர்ப்பூஞ்சோலை தனில்வந்தா னதுபகரில

வானத்துறும்பலவேமாவும் புறம்பலவே
கூனக்குரங்கின் குழாம் பலவே யினத்தி

லேறுமலைத்தேங்கு மிரவிதொடுத்தேங்கு
மூறுமதுச்சோலை யுறத்தேங்கு மீறுமலர்

சேர்க்குநிறையத்தளியே சேரடவியத்தளியே
யார்க்குமதன்பாளையத்தளியே நீர்க்கரையில்

வாயிலிடுங்கூட்டமரும்பைங் கிளிக்கூட்டங்
காயுங்கனியுங்கவிக்கூட்ட மாயதிரு

விந்தவனம்வந்தோர்க் கெழுந்தவனநீக்குமது
சொந்தவனமாமலருந்தூற்றுமே சிந்தை

யறிவானரம்பை யமரமேலாகிச்
செறிவானவனையுமுன் சேர்ந்து குறியாகி

யுங்கருமஞ்சுரபியுங் கொண்டேந்துதலாற்
றேயுமமராபதியாஞ் சோலையிலே வேயிசைபோல

வண்டுமுழங்கிவரமாங்குயில்ராகம்படித்துக்
கொண்டுவரமயில்கள்கூத்தாடக் கண்டுவந்தான்

கந்தாடுந்திக்கருக்கோட்டைவேந்தன்முன்னே
பந்தாடினொருத்திபண்பாலே நந்தாத

பொன்மாதுநின்றடிக்கும்போதெழும்பும்பந்துவந்து
தன்மார்பின்முட்டாமற்றட்டினதும் பின்மாறிக்

கொங்கைக்குமேலெழும்பக்கொவ்வையிதழ் நீண்டாம
லங்கையினூற்றட்டியமைத்ததுவு மெங்கள்பிரான்

பார்த்துமடமயிலேபந்துனக்குநாயகனே
சேர்த்துவிடாமற்புலவிசெய்தனையே வார்த்துணியக்

காட்டுமுலையுங்கனியிதழுந்நீண்டாம
லாட்டுமிருகையாலடித்தனையே மூட்டியந்தத்

தையலுடன்சேர்ந்தன்றேதட்டியமைத்தனையென்
றையனுரைப்பவவணைத்தா னெய்யாம

லம்மனையைத்தொட்டொருத்தியாடினாளாடுதலுஞ்
செம்மலர்க்கைவிட்டெழுந்துசெல்வதுவுங் கைம்மலரின்

மீதுவருவதுமின்னனையாளேற்றுதலு
மேதுசெயும்போகவரவெய்த்ததுவு மீதெல்லாங்

கண்டான்முலைப்புடைப்பைக்கண்டுபயந்தம்மனையுந்
திண்டாடிமேலுலவிற்செல்லுங்காற் றண்டாம

லண்ணாந்துமேற்பார்த்ததைப்பார்த்துநாம்புகுந்தால்
விண்ணாந்தலத்தும்வந்துமேவுமென்றே யுண்ணடுக்

கெஞ்சியபயத்தம்வந்துகேட்பதுபோற்கைப்பிடித்து
மஞ்சியதென்றெண்ணியமைத்திலேயே வஞ்சியே

யென்றுரைக்கமார்பிலிணைத்தாளிரண்டுமுலைக்
குன்றுடனேசேர்த்துறவுகூட்டினா ளன்றியுமே

செய்வாளைசங்குடைக்குந்தென்னிளசையூரன்முன்னே
மைவாளைவீசுமதர்விழியாள் கைவாளை

வீசினுனிற்குமந்த வேளொடுத்தபாணமென்னும்
வீசினுனிற்கரும்பின்மேவாதே காசலேயா

யேடுதனையெடுத்தி ரிந்தவிரிவிச்சுமல்லா
லேடுதனைநினைத்திரென்செய்திர் மாதுநல்லீர்

கத்திக்குறையாதோ காணுங்கருங்குயிலுங்
கத்திக்குறையாதோ காமுகனை யெத்திக்குரு

சுற்றமடுக்குந்சுடர்வாளன்றோநீருந்
சுற்றமடுக்குந்துணைத்தனமே யுற்றீரோ

யெந்தவகையாலே யெடுத்துவகையாலே
சொந்தவாடெட்டதுகையாலே யந்தவகை

கண்ணிவிருவானைக்காட்டிச் செருவானை
மண்ணிலடங்கவருவானை யெண்ணியே

பிசினவாதுநெடியபடைவானை
வீசினவாதுவிலக்கென்றே பேசியே

வர்சபுதத்தையுடன்வந்த பதுமாபதியு
மேசபதத்தைவினைத்ததுபோ னேசித்

திருவீரும்பந்தையிணைத்தடிக்கவிங்கே
மருவீரெனவுரைக்கமாதர் கரமலரா

லொன்றுந்தரமாக வோங்கியபந்தேந்துமடி
யொன்றுந்தரமாகவுற்றெழும்பச் சென்றவிசை

புத்தடிக்கும்போதவர்மார்பத்தடிக்கொண்டோங்கியரு
பத்தடிக்குங்கொங்கை பணைத்தசையுந் தத்துமடி (ம

நூறடிக்கும்போதுநுடங்கு மிடையாகுமிள
நூறடிக்குங்கொங்கையினுநெருந்திடுமே யேறுதொகை

யாயிரங்கையோவடித்தாயங்கைசிவந்ததுமெய்
யாயிரங்கையோவெனமின்னுருரைத்தார் நேயமாய்ப

பத்தாயிரம்விசைசெம்பந்துமுலைக்கேறவொரு
பத்தாயிரவிசையும் பற்றுதலால் வித்தாரனு

செய்தவரைமுலையாகுசெய்தவரைப்பார்த்தானம்
பெய்வதெவரையேவரையோ மெய்தரைய

வுந்தியுரோமவொழுங்கேகயிறுகப்
பந்தியிணைமுலையேபம்பரமா யந்தரத்தி

லாடவிசைந்தங்குவிளையாடவருமங்கையர்க்கோ
ராடவர்சிங்கங்கொடுத்ததாடகமே நாடியே

யங்காரமாமுலையாரந்தமரச்சோலையிலே
சிங்காரம்பார்க்கவென்றுசென்றுரோ பைங்காவி

லெவ்வொருவர்தாமுமிணைந்திருவராகநின்றே
யொவ்வொருவார்த்தையுரைக்கின்று ரவ்வகையே

தென்னமரத்திற்றிரண்டநெற்றைப்பார்த்தொருத்தி
யுன்னியிவளன்னைமுலைக்கொப்பென்றுள் பின்னையவள்

கொம்மட்டிமாதுளையின்கொத்துப்பழத்தையிவ
ளம்மைக்குமம்மைமுலையாமென்றுள் விம்பியவண்

முள்ளேறுபட்டமுழுக்கூவிளம்பழமுன்
னிள்ளேறுபட்டமுலைக்கிணையென்று ளுள்ளபடி

யேற்றுகமுகிலிருந்தவடுவுன்பிடரிக்
கீற்றுநகம்போற்கிடக்குதென்றாண் மாற்றியிவர்

சொல்லவொருத்திதுணைவனொருவனென்றே
யில்லைமகலாதிருக்குமேந்திழையாண் மெல்லவே

மந்தியைக்கல்லாலெறிந்தாண்மற்றதுதேமாங்கனியைச்
சிந்திவிடவாவிச்செலத்தில்விழ முந்தியே

தாமரைப்பூவேந்தவதுதானேபருத்துரத்த
தேமன்றலையேந்துசெங்கையாய்க் காமரதந்

தன்னாயகனைபெண்ணைத்தன்றலையைப்பார்த்துநிற்கு
மின்னாண்முகம்பார்த்துவேறொருத்தி சொன்னாள்

மிந்தமலரிலிருந்தானிமேலே
வந்தடரும்வண்டுவெடுப்போலு மந்தப்

பொதுமாதர்கொங்கையிதுபோலிருக்குமென்று
ளதுதான்வெறுப்பாயயர்த்தா ளிதுபகிற்

போரிருட்டிவாகரனைப்பொன்சொரிதுவாகரனை
யாருமறிக்குமறிவாகரனை மேருவிலே

சென்டடித்தகோமானைச்செல்வப்பெருமானை
மண்டலத்தைத்தாவிவருவானை மின்மச்

சரமெடுத்தெய்வானைத்தருங்கொடைக்குவானை
மரபுதப்பாநல்லசில்லவானைப் பரவினே

னாசையவன்பாலேயானுமன்பாலே
பேசவறியேனென்பெண்பாலே வீச

யெழுகமுகமேயொனதுமுகமே
முழுதுந்துளைசமுகமே பழுதின்றிச்

சாருமுத்தியானமேசாற்றுமத்தியானமே
சேருமிச்சைமாறுத்தியானமே காருலவி

ரீதமருங்காவிரோவெளிருப்புக்காவிரோ
காதல்கொண்டவென்னுயிரைக்காவிரோ யோதுங்

குருக்கத்தியாதுங்குயிற்கத்தியுள்ளங்
கருக்கத்தினைக்குமுருக்கத்தி பெருக்கமா

ரீரமுள்ளமாவிலேயேயுமடன்மாவிலேயே
மாரன்வலைப்படுத்துமாவிலேயே பாரப்

பலவிலுறுங்காயேபனைத்துநெருங்காயே
கலைபிடிவெளிரங்காயே குலவியதே

மாங்கனியேநான்விரகமாங்கனியேநானுநெஞ்சுந்
தேங்கினமேவித்தரைக்குந்தேங்கினமே யோங்கிவள

காவலேகோங்கேயென்னுவலேசொல்லவுநா
ளுவலேளேவருமாளுவலே பூவுலகை

யாளும்வெங்கடேசுரெட்டனுதிமால்போல்வளரு
நாளுமலருநகைமுகமுந் தோளுமு

வனசமலர்க்கையுமலர்மடந்தைசேருங்
கனசமுகமானகடைக்கண்ணு மனுபதிதன்

செக்கச்சிவந்ததிருவுருவுமொக்கலையின்
பக்கத்தமைந்தபடைவாளு மிக்க

கடுக்கனுமோதிரமுங்கைச்சரமுஞ்சுற்றி
யுடுக்குஞ்சலவையுடையும் வடிப்பமா
யெந்நேரங்கண்ணுக்கெதிரேவராக்காணு
மந்நேரங்கட்டியணையேனோ முன்னேபோய்த்
தொட்டுக்கொளவாகவாமிகவாமியென்
றெட்டித்தாநானியம்பினே னெட்டி
மடிபிடிக்கக்கிட்டவராக்காணேன்பின்னை
மடிபிடிக்குங்காரியமுண்டாமோ துடிதுடித்தே
னையோவுருவெளியையாசைக்காணவனென்றே
சையோகஞ்செய்யத்தடுத்தேனே பொய்யோவென்
றெண்ணிமலைக்கையிலேயென்னுயிர்போல்யான்புரிந்த
புண்ணியம்போலிட்டதெய்வம்போலவந்தாய்பெண்ணா
வாசந்துரைக்கவிசுவாசந்துரைக்குமிது (சே
வாசந்துரைக்கமணக்குமே பேசியவுன்
வாசகமேசெந்தேனும்வஞ்சகமேதுன்னைமெய்க்கும்
பூசகமேயென்னுடல்பொன்பூசகமே மோசமில்லா
வாக்குத்தரமேவழுத்துமெனக்குத்தரமே
வாக்குத்தரமேயுத்தரமே நோக்குங்கா
லென்மாலைநீக்கியெழுமாலைமாற்றியெங்கோன்
றன்மாலைவாங்கித்தரவேணும் பொன்மாதே
யென்றனைநோக்கியெழுந்தாளைநீக்கியப்பாற்
சென்றனையன்பதத்தைத்தெண்டனிட்டா னொன்று

மானொருத்தியன்புமானுண்மருவவங்க [சொன்னாண்
மானுள்விளம்பவ்வரலாமோ வானாலும்

வட்டமுலைமீதுவல்லவட்டமிட்டாள்செங்தேனு
வட்டமயல்கொண்டாளேமாதொருத்தி ‘யிட்டமிகுங்

காமனிரதிகொடைக்காமனரசிநடுங்
காமனதிலாசையடங்காமனின்று டேமணக்கும்

வாயருமையாமவளேமாதருமைபோவிரங்கார்
தாயருமைவாளிதனையழைப்பார் நேயமிகுய

கொம்பனைமேலாகக்கொழும்பனையேவேண்டிமல
ரம்பனைநொந்தாளதட்டுமோர்ப்பனையே சம்பிரமக்

காரிமனவெப்பமுமாங்காரிவிடாள்பைங்கனியுங்
காரியமுதுங்கசந்திருந்தாள் கடறு

மளகமிருண்டவல்லேயாசையவாவல்லே
வளருமுலையிரண்டும்வல்லே யிளமயில்போ

னீங்காமலர்க்காவினின்றுடனக்காவி
பாங்கானமுல்லைவிழிபைங்காவி யாங்கானு

மெய்க்கமுகமேயிடறுமதிமுகமே
யொக்குமதன்போருமொருமுகமே செக்கார்நீ

வாரிசப்போதங்கையேமாரன்வந்ததங்கையே
சாரும்வடிவிரதிதங்கையே நேருணாக்கில்

வாமமுனிதம்பமேவாசனைகதம்பமே
சாமியவட்குனதுதம்பமே நேமிக்கும்

வானவரம்பையேமாறுவாரம்பையே
யானதொடையுமரம்பையே நானறிய

வைத்தவிருப்பேவளருமனவிருப்பே
மெத்தவுடனும்விருவிருப்பே சித்தசனை

வெல்லுமனசோதிடமேவேறிலைப்பேச்சோதிடமே (ள
சொல்லுமெனக்கேட்பதுவுஞ்சோதிட மேவல்லியன்று

கைக்கூடல்விட்டாள்கணைக்கூடலோதனமு
மைக்கூடல்வந்துவளைக்குமென்று டைக்கு

முலைக்குமுலைக்குமுளரிமலரொன்றன்
மலைக்குமலைக்குமனமே சிலைபடா

லடிக்குமடிக்குமலையொலியென்றுள்ள
நடிக்குநடிக்குமுதநட்ப னெடிக்குமவன்

வெள்ளைமதியம்வெதுவெதுப்புங்கண்டருமைப்
பிள்ளைமதியும்பிரியாதோ வெள்ளமோ

லூசிக்குமாரனுறுபடையென்றுண்மனதங்
கேசிக்குநல்கமனுக்கேளென்றாள் வீசுகின்ற

மோகவலையேதவிருமோகவலையேகவுமப்
பாகவலையேமதியைப்பாம்பென்று ளாகையினு

றப்பனையேசொற்பனையேசற்பனையேகற்பனையே
யப்பனைவாய்நட்பனைவாயார்ப்பனையே யிப்படியே

காமனையேசேர்குயிலேகாமனையேகூவுதல்பாங்
காமனையேகூவவென்றுகட்டுரைத்தா டேமலர்ப்பூங்

கோதாயென்செய்தியவர்க்கோதாயுடலைவெறுங்
கோதாய்மதியுருகுஞ்சிக்கொண்டதென்றாள் மீதே

வருந்தென்றலையும்வருந்தென்றலையு
மிருந்தென்றலையிலெழுந்தென்றாள் பொருந்துந்

தனக்கும்பத்தாள்விரகதாகந்தணிய
வுனக்கும்பத்தாள்விடுவளோகோ வெனக்கு

மொருகோடிசொன்னாளுபசாரநானு
னருகோடிவந்தேனையையா திருவுளத்துக்

கேத்தபதுமினிப்பெண்ணின்பரசதாளிவெள்ளம்
பூத்தமலர்க்கொடியைப்போலசைவாள் கோத்தவரியு

முத்தாரக்கொங்கைமுழுக்கவிளம்பழமாம்
வித்தாரமாமுவமைவேறுண்டோ வித்தாக

வார்க்குமனதிலரும்பவருங்காமமுனை
பார்க்கில்வயதும்பனிரண்டே தீர்க்கமா

மெட்டுமணத்திலிதுவுமொருமணமாய்த்
தொட்டுமருவவரத்தாதுவிட்டா டொட்ட

மருவுமணமுமெனமாறுமலுன்னை
மருவுமணமுமனதா யொருதரமே

நூறுதரமாகவென்னைநோக்கியுரைத்தாளிதற்கு
மாறுதரவெண்ணிவருந்தாளோ சிறும்

விதனமதனைவிலக்கென்றுசொன்னா
ளதனைமனதிலறிந்து சதுரன்

மதுரமிருதுவசனலளித
னதுலனனகனபயன் பதுமை

நயனமருவுநயருணவசீரன்
புயபெலவானெட்டபுரேச னியல்பாய்த்

திசையிலரசர்திறைதரக்கண்டுள்ள
மிசையும்வெங்கடேசுரெட்டமேந்திரன் விசயனையுங்

காமனையும்வெல்லவல்லகட்டழகன்கேட்குமுன்னே
யாமவனைநாமுமறிவோமென்றான் றேமலர்ப்பூஞ்

சோலையிலேநின்றாள்சொருகுகுழல்சோதிநாள்
சேலைநெகிழ்த்துடுத்தாள்சீமாட்டி யோலை

குழையைத்திருத்திநாள்கொங்கையசைத்தா
ளிழையைப்பொருவுமிடையெங்குந் தழையைய

பறித்துத்தன்வாயில்வைத்தாள்பார்வையினாலென்னைக்
குறித்துப்பார்த்நாணைத்துக்கொண்டா ளறிக்கை
யுள்ள
மாதவனைக்கூட்டியிங்கேவாவென்றுனென்றனையு
மாதரவாய்த்தூதியழைத்தாளே நீதியுள்ள

செங்கோன்மைசெய்யுஞ்செகவீரராமனென்னு
ெங்கோனையான்கண்டிறைஞ்சினே னங்கே

கவித்தகூடாரமதிற்கட்டுதிரைக்குள்ளே
புவிக்கரசன்முன்னேநான்போனேன் றவப்பேறே

கண்ணேமணியேகனகமேசெங்கமலப்
பெண்ணேகிடையாதபேரமுதே பெண்ணரசே

யின்பரசமேவருகவென்றானவன்பதத்தை
முன்பரவினேனவனுமூந்நிதொட்டா னன்புடனே

பூவிரித்தமெத்தையின்மேற்போயிருந்தேனென்னையவ
மேவுதற்குப்பட்டுவிரிப்பாரோ காவில் (ன்

வருமுத்தமீயென்றான்வாயிதழையூட்டி
யொருமுத்தமீயென்றுரைத்தான் மருவித்

தழுவணையிற்சாய்ந்துதனைத்தானெருக்கித்
தழுவணையென்றேயுரைத்தான்சாமி புழுகுடனே

சந்தனத்தைப்பூசிச்சவாதையெடுத்துக்கழுத்தாரு
சந்தனத்தைச்சூழத்தடவினான் முந்தவிலை

பாகருத்துமென்றுகருள்பாகியுந்தாவின்னம்வெறுப
பாகருத்துமென்றுபார்த்தேனே மோகி

முலையைப்பிடிகொடுத்தேன்முத்தமிட்டுத்தாம
முலையைக்குழலில்முடித்தான் சலவை

யுடையுங்கலையுமுரிந்தானப்போதே
யுடையுங்கலையுமெனதுள்ள மடடா,

வடித்தொடைக்குட்கையைவைத்தானங்கேவலைவந்
தடித்துடைக்குங்காமவெள்ளமையோ மடிக்குள்
வைத்தா
னல்குலுக்குமேல்விரலினாலளைந்துசுற்றவுமை
யல்குலுக்குமாவேசமாகாதோ நல்குரு

செவிக்குணினாவளையச்சித்தசன்றன்மந்தாரு
செவிக்குமருள்போலத்தியக்கு மவசரமாய்த்

அப்பைகொய்த்துடிக்கவிதழ்துய்த்திருக
அப்பையமுதூறச்சுவைத்தேனே மெய்ப்பாய்த்

தடவரையையென்றேனென்சாமிபுமெய்கொங்கைத்
தடவரையிலேவடுவேந்தினான் படபடெனச்

சையோகஞ்செய்யச்சகியேன்வெகுமயனார்ச்
சையோகருசத்தனமிந்தாவென்றேன் மெய்யே

சங்கமருதராருக்குவளக்கட்டியணைத்துப்போ
சங்கமருசெய்யென்றுகடிந்தே னிசய்போல

லூடலுக்குஞ்சற்றேயொருமித்தான் வேள்கணைமெய்
யூடலுக்குமென்றேயுளகினேந்தேன் கூடவா

முத்தையாவென்றேன் முகந்திரும்பிக்கன்னமிசை
முத்தையாவென்றேமொழிகின்றேன் றந்துவணைக்

காமனேவந்தினிமேற்கைகலப்பானென்றுயிரைக்
காமனேயென்றிரண்டுகையெடுத்தேன் மாமதன

பூசையோதாழ்வாகப்போமோசவாதையின்னம்
பூசையோவென்றுபுலம்பினேன் பூசைவந்து

வாய்க்கவிளையாட்குரசம்வாய்க்கநிறைவாய்க்கவுற
வாய்க்கவுளையூட்டமனம்வாராதோ சீக்கிரமாய்க்

கட்டுமுலையானையிருக்கட்டுமதலிலைநடக்
கட்டுமென்றுசொன்னமொழிகட்டாதோ கிட்டவந்து

கைக்குளணைமென்மலர்ச்சேக்கைக்குளெனைவைத்திரு (கொங்
கைக்குளும்வாய்வைக்கிலென்னகைக்குமோ மெய்க்
கலவி

செய்யவாவென்றிழுத்துச்செங்கையிறுற்கட்டினேன்
பையவாயூறல்பருகினே னையனென்னை

முத்தமிட்டபோதுமுழங்கும்புறுப்போலச்
சத்தமிட்டுக்கட்டித்தழுவினேன் ; மெத்தவிரி

தட்டுநிதம்பந்தனைத்தடவியங்குலியாற்,
றெட்டுநடுமணியைச்சுற்றினேன் மட்டுண்டோ

தேகபரவசமேசிந்தையவன்வசமே
யாகவிருந்ததவசமே போக

மலம்பிவடியுமென்றேயாற்றுமல்வாயும்
புலம்பியுடலயர்ந்துபோனே னிலம்புரந்த

மன்னனெனைக்கையாலேவாரியெடுத்தான்மயக்கி
யென்னசெய்வானேமடியிலேழுந்தினேன் பின்னுகின்ற

கொக்குமரத்தொருகொப்பின்மயிற்பெடை
யொக்கவசைத்ததையொத்ததுசிக்கென

வட்டமுலைக்குளும்வைத்தநகக்குறி
பட்டதுபற்குறிபட்டதுபொட்டென

வெக்கியெழுப்பியுமெட்டியுயர்ச்சியு
மொக்கிடுமெய்த்தொழிலுச்சிதவக்கணை

யெத்தனைதத்தாமெத்தனைசித்திர
மெத்தவினைத்தொருமித்தொருமெத்தையில்

வந்துவிழுந்ததுவண்டுபரந்தது
கொந்தளகம்புனைகொந்தலர்சிந்தின

கொங்கையெனுஞ்சிறுகும்பநெருங்கவு
மங்கையமூழ்ந்தவுமங்கமுமங்கமு

மொன்றினசிந்தனையொன்றுகினைந்நிலை
யென்றுகினேந்ததுமென்செயலன்றிது

காமவித்தையென்பதவன்கைவந்தவித்தையொருச்
சாமமட்டிலுஞ்செய்யச்சலிப்பானே மாமயிலே

சின்னஞ்சிறியேனேசித்தசன்மார்க்கமென்ப
தின்னந்தெரியாதேயென்செய்வேன் கன்னி

யறியாதவென்னையலக்கழித்துக்காம
வழியேநடத்திவகையாய் மொழியும்

வகைக்காரச்சாமிமருவினதின்மெத்தத்
தகைத்தேனேகாமந்ததும்ப முகத்தை

முகத்திலணைத்தணைத்துமுத்தமிட்டான்காம
சுகத்தைவருத்தித்தொடையை யகட்டி

நெருக்கியசைக்கநிறைந்தசலராசி
பெருக்கியுடைத்ததிருபேர்க்கும் விருப்பம்வர

மோகந்தணிந்தேன்முழுதுமெனக்கின்பவனு
போகங்கிடைத்ததிறற்பூரித்தே னோத

சயனத்திருத்திச்சரீரமுழுது
நயனத்திறற்பார்த்தானன்று யியனு

மயிலேகுழலுமழையேவிழியு
மயிலேயிடைநூலலவோ நயமான

பொற்றட்டினிலப்பொடிபரப்பிவைத்ததன்றோ
ஒற்றகடிதடத்துரோமமென்றான் சொற்றவனு

மிந்தவகைசொல்லவெனக்குமனதுவெட்கம்
வந்துதுகிலான்மறைத்தேனே மிந்திரவிற்

போலேயிருக்கும்புருவத்துவேர்வையைக்கை
யாலேதுடைத்தானருமையிட்டான் மேலாய்த்

தெரியுங்களபச்சிமிழ்முலையைமூடச்
சரிகைரவுக்கைதரித்து தெரியுங

கருவளையைநீக்கிக்கனகவளைசாத்தி
யிருசரணிற்பொற்சிலம்புமிட்டு வரிசைப

பணிதையெல்லாம்ரத்நப்பணியாயணிந்தான்
றணிவிலாமாமோகந்தந்தா னணியுமழ

கெல்லாமவன்பார்த்தானென்மனதுக்கேத்தவனீ
யல்லாமல்வேறொருவராகாதே நல்லாளே

யுன்னைமறவேனொருகாலமும்பிரியே
னென்னைமறவாதேயென்றுரைத்தான் பின்னையுமே

யன்புபொருந்தியுனக்காதரவுபேசியவாய்
பின்புமொருவருடன்பேசுமோ முன்புனது

கொங்கையணையக்குழையத்தழுவியவென்
செங்கைமறுமாதர்முலைதீண்டாதே பங்கயப்பூ

வன்னமேயுன்வாயதரமருந்துமென்வாய்க்
கின்னமொருவரிதழேற்குமோ சொன்னதெல்லா

மெய்யேயென்றுணையிட்டவேந்தனுக்கென்சொல்வேனென்
மெய்யேமுழுதும்விலையானே      ணையனையப

பூங்குயிலேநம்மனைக்குப்போவோமென்றுனெனக்குத்
தாங்குமணித்தண்டிகையுந்தந்தானே      யோங்கு

மதவரையைக்கொண்டுவருகவெனமேற்கொண்
டிதமுடனேயேறியிருந்தான்      பதம்வருடுங்

வேந்தரெல்லாம்வாம்புரவிமேலேறினார்புவன
மாந்தரெல்லாருஞ்சூழவருகின்றார்      சாந்தமுலைப்

பொன்னேயுமங்கையரும்பொன்னாட்டரம்பையர்போன்
முன்னேயும்பின்னேயுமொய்த்துவந்தார்      சொன்னேயப்

பாடகருநட்டுவரும்பாங்கில்வந்தார்பல்லியங்கள்
கூடமுழங்கிக்குமுறுமே      சோடாய்க்

காடிநவுரிகனகதப்புமொந்தை
பெரியவீராணம்ரணபேரி      முரடுதுடி

சல்லரிபம்மைதடாரிதவின்முரசு
மல்லரிதக்கைவகுப்பாக      வொல்லெனவே

நாகசுரத்துடனேநாலுதிக்கும்பூரிகையு
மேகசுரமாய்முழங்குமெங்குமே      யாகும்

வலம்புரியும்வால்வளையும்வாங்காவுங்கொம்பு
நிலம்பரவவெய்துகிளையிற்      றுலங்கப்

பூகிவுதருபஞ்சவனப்பக்களையிட்டேறுங்
குகிளையின்மேல்ராயராகுத்த      னதிசெயவான்

வங்கர்தொழூழுவரகண்டவெண்டையத்
துங்கவுரிகோலசுரதாண னெங்குந்

தளங்கண்டுதத்தளிப்பார்தங்களுக்குமிண்டன்
வளங்கொண்டசந்த்ரகிரிமன்னன் றளங்கும்

பரசமராசர்பகைபிருளைநீக்கு
மிரவிகுலோதயநரேந்த்ரன் முரணு

திருபர்சமரநெளிநெளியச்சீறிப்
பொருதுவருசார்வபூமன் சொரியுங்

கடகரடகும்பகராசலமேற்கொண்ட
திடமகுடபாரசுப்ரதீபன் வடகர்

குடகர்கவுடர்குருநாடர்சென்னி
தடவுபதயுகப்ரதாபன் கடலி

னமுதநயகுணவொய்யாரவதிகார
சமுகசெயதரசுபாகி தமிழருமை

யேதுமறிந்தவெங்கடேசுரெட்டன்வந்தானென்
ஹாதுமணித்தாரையுடனூர்க்க மோதியே

சேகண்டியுமணியுஞ்சேரவொருபேரணியாய்ப்
பூகண்டமேங்கப்புடைத்துவர வேகமாய்க்

கொம்புமுரசுங்குமுகுமெனப்போர்விசயக்
கொம்புந்திருவுநின்றுகூத்தாடக் கும்புகும்பாய்த்

தம்புருவீணைசரமண்டலமெடுப்போர்
தும்புருவாயோர்வகுப்பிற்சுற்றிவர வம்புவியைக்

காக்குநிருபன்கருங்கோட்டையாதிபதி
தாக்கும்விசயச்சமர்பாடி வாக்குடைய

பாவலர்கள்சொன்னதமிழ்ப்பாடன்மிகப்படிக்கு
நாவலருமேஎர்வகுப்பினுடிவர மேவியே

நித்திமுகவீணைசிங்குழலுங்கைம்மணியு
மொத்திசையநட்டுவர்களொக்கடிக்க மத்தளத்தின்

சத்தமுமுங்கச்சதிமுறைதப்பாதபடி
சுத்தராகத்தின்றொனியதிர மைத்தடங்கண்

மின்னுடம்புரிந்தாண்மின்வெட்டியார்த்ததுபோ
லந்நாளுருவசிவந்தாடுதல்போன் முன்னாக்

காலவைத்ததுங்காணேங்கண்மருட்டுங்கண்டறியோ
மால்வைத்தசிந்தைமயங்காதோ நால்வைத்த

சிற்றிடையொசிந்தெழுதுசித்திரமசைந்தபடி
முற்றிழைகலைந்துவிழமுற்சருவி மற்றுமொரு

பம்பரமசைந்தபடிபந்தெனவெழுந்தமுலை
கும்பகுடமென்றசைவுகொண்டதொரு சம்பிரம

மிந்தநடனம்புரிவதெந்தவகையென்றமரர்
வந்தனர்கள்வந்தனையுவந்தனர்க ளந்தவகை

செந்திருவன்னுளுந்திருநடனஞ்செய்யமின்னார்
கந்திருவப்பாடல்கனிந்திசைக்கத் தந்தியின்மே

லிந்திரன்போலெங்கள்வெங்கடேசுரெட்டமேந்த்ரன்வர
ப்
புந்திமகிழ்ந்தெட்டபுரத்திலுள்ளோர் சந்திதொறுங்

தோரணங்கணாட்டிச்சுவர்த்தலத்திற்கோலமிட்டுப்
பூரணகும்பம்பொலிவித்துச் சேருந்

தலைவாசற்றோறுமிருபுறந்தபந்தலிட்டு
நிலைதோரணியாய்நிறுத்திக் கலைவையுடன்

கோதியசந்தக்குழம்பும்பனிநீரும்
வீதிதொறுங்கொட்டிமெழுக்கிட்டுப் பாதைதொறும்

வாசநிரப்பியட்டமங்கலமெல்லாம்பரப்பித்
தேசமெல்லாம்வந்தொருபாற்சேர்ந்ததுபோற் பேச

வலங்கரித்தபட்டணத்தையண்டர்பிரான்போல
வலங்கொளவேயெம்பெருமான்வந்தான் றுலங்கு

மடக்கொடியார்கூந்தன்மழையிருட்டுக்குள்ளே
யடக்கியசெம்மாலையணிந்து இடப்படவே

சந்திரனுக்குள்ளேதபனன்முளைத்ததுபோற்
செந்திலகச்சிந்தூரந்தீட்டியே யந்த

மலையின்மழைபெய்தமுகில்வந்திருந்ததென்ன
முலையையரவுக்கைகொண்டுமூடிச் சிலைமாரன்

தேருநிரைத்ததிரைபோலப்பொன்னுடை
யூருமறையவுடுத்தியே பாரச்

சிலம்புபதத்திலிட்டுச்செம்பொற்கடக
மலம்புவளைகையிலணிந்து நலம்புரியும்

பொன்னாபரணம்புணர்முலைமேற்பூட்டினார்
மின்னுமெனவேவெளியில்வந்தா ரந்நாரி

லம்பனையகண்ணாரவனைச்சிவந்தகிருஷ்ண
விம்பமெனவெண்ணவிளம்புவார் பம்பு

மிடைச்சியரைக்கூறைகொண்டாயென்பாரொருசிற்
றிடைச்சியரைக்கூறைகொண்டாயிந்நா ளெடுத்த

கரவளையாய்க்கொண்டதன்றுகாணேமேமாதர் (கக்
கரவளையைக்கொண்டதின்றுகண்டோநிரை யொதுங்

கைக்குடையாமேல்வரையைக்காட்டினைவேளம்பெம்முது
கைக்குடையாமேவரையக்காணேமே மிக்க

வடமதுரைக்குந்தலைமைவாய்த்தனைதாய்வைக
வடமதுரைக்குநசமரமாற்றாய் இடமாகக்

கோவியப்பாவையரைக்கூடினையெங்கட்குமென்றைக்
கோவியப்பாவையென்றுற்கூடாயோ காவலவர்

சிங்கமேயென்றுதெரிசித்துமாதர்பிர
சங்கமேசெய்யத்தயவாக யெங்கடுரை

கண்ணாலெவர்க்குமின்பங்கட்டளையிட்டேவிரும்பும்
விண்ணாடுபோலுமற்றோர்வீதிசென்று னுண்ணாடிரு

சைவர்மடசத்திரத்திற்சங்கரக்குமாருநித்த
மெய்விரவினாலேவிசாரிக்கத் தெய்வச்

சிவனடியார்தங்கள்பசிதீரவமுதுண்டு
புவனதரனைப்புகழ்ந்து நவிலு

மாகரவென்சத்தமதிரமடமாதர்
குரவைமுழக்கங்குமுற விரைவாய்

மறையோர்களாசிவனைகடல்போலார்க்க
முறையாகப்பட்டர்முழங்க நிறைவுதரு

மாகதர்கள்வந்துமகாராசனேமிருந்த
யோகதரவிசயவுத்துங்கா நாகரிக

வீமாவதாரரணவீரவிக்ரமார்க்கரகு
ராமாசெகவீரராசேந்த்ரா சேமா

வனகாசம்பன்னவதுலாவிற்பன்ன
கனகாபிஷேககொடைக்கன்ன தனதா

சதுரமனுநீதாதமிழ்வரப்ரசாதா
பதுமவிகசிதபொற்பாதா வதிக

மிருதுரசவாக்யாவெகுபலசிலாக்யா
பருதிகுலேசசவுபாக்யா யிருநிலத்தை

முற்றுமளந்தமுகுந்தாவெனத்துதிக்க
மற்றுமொருவீதிமருங்கணைந்தான் சுற்றியே

முன்னந்தம்பாய்வர்முறைமைதவறுமற்
பின்னந்தம்பாய்வர்சிலபேதைமா ருன்னியே

நின்றநிலையினிமிரவெழும்பிவரத்
துன்றியிரண்டுசுற்றுச்சுற்றிநிற்பா ரன்றியுமே

கையானதைமுதுகிற்கட்டியிருநூறுதர
மெய்யாதலாகையெடுப்பார்கண் மையாரு

தானவரைமேலேறித்தாவியொருலாகெடுத்து
மானனையார்பூமியிலேவந்துநிற்பார் தேனிகராய்ச்

சொன்னமொழியார்தொழிலெல்லாம்பார்த்திளைச
மன்னவனுமற்றோர்மறுகில்வந்தான் முன்னெதிர்ந்து

தாக்கும்விழிவாளைச்சமர்வாளிலேயேற்றி
நோக்குவர்வழூசிறுனியேந்தி மீக்கொண்டு

பெய்க்காலிலேறுமவர்பொன்னூட்டரம்பையர்த
மெய்த்தாறனையின்மிதியாம லக்கால்கொண்

டந்தரத்தினிற்பதுபோலம்புலிமான்கைதாங்கி
வந்ததுபோற்சுற்றிவருவார்க ளிந்தவகை

சூட்சியறிந்ததுறைகள்சிகாமணியுங்
காட்சியெல்லாம்பார்த்துக்களிகூர்ந்து மீட்சியாய்

வீசாரமேல்கடலில்வெய்யோன்வந்தானிவனு
மாசாரமேல்வந்தரசிருந்தான் றேசாய்

விராவித்திவெட்டிடபகல்வெத்தியுமத்தாட்பு
யிராவிற்பகல்வருவதென்னப் பராவி

யிருபுறமுஞ்சூரியனுமிந்துவுநேராக
வருவதுபோலெங்கும்வயங்க விருது

புகலுமவரும்புரவலருமற்றோர்
சகலரும்வந்தெய்துஞ்சபையின் மகராசன்

கண்ணுந்திருமுகமுங்கையும்பதயுகமு
மெண்ணுங்கமலமெனமலர நண்ணுதலா

லட்டலட்சுமிக்குமிடமாகுநெடுமாலெனவே
கட்டழகுபெற்றானயோகன் றிட்டமிருங்

கோலாகலப்ரசங்ககோதண்டபாணிவரை
மேலாயெழுதும்விருதினோன் சூலார்

மழையிறைப்பதென்றுவழங்குங்கொடையான்
கழைசுழித்துப்பாயுங்களிற்று னிழல்பொழியுங்

கொற்றக்கவிகையொன்றுகொண்டேதிசைபரப்பி
மற்றப்புவிபுயத்தில்வைத்தருளி யுற்ற

மிகவீரராமருவார்வீறடக்கிவென்ற
செகவீரராமவெட்டசிங்க மகிழ்வாகத்

தந்தையெனப்பெற்றதனக்குத்திரவியம்போற்
சிந்தைவிரும்புந்தியானத்தான் றந்தசெல்வ

கீர்த்திரணகுராக்கெச்சிலப்பபூபதியாம்
பார்த்திபனைத்தனக்குப்பாலனென்போன்சீர்த்திபெறக்

கொட்டமடக்குங்குமாரமுத்தையெட்டனை
யிட்டமிருந்துணைவனொன்றுரைப்போன் கொட்டமிடு

சிந்தமனைக்கம்பயனைச்சின்னேறைவல்லேறைச்
சந்ததமுமாதுலராய்ச்சாற்றுவோன் விந்தையாய்ச்

சொல்லேறுசெந்தமிழ்சேர்சோத்தணனைச்சிந்தமனை
வல்லேறைநல்லமருகனென்போ னெல்லாரைத்

திக்கனைத்தும்வென்றஜெயசிங்கம்வெங்கடேசுரெட்டன்
மிக்ககொலுமுகத்தில்வீற்றிருந்து பக்கத்தில்

வந்திருந்தபாவலர்கள்வாழ்த்துதமிழ்ப்பாமாலை
புந்திமகிழப்புனைந்தருளி முந்தக்

கடுக்கனுமோதிரமுங்கைச்சரமுநல்கி
யுடுக்கும்புடைவையுதவித் தடுப்பரிய

வாம்பரியுந்தண்டிகையுமாநகருந்தான்வழங்கி
[illegible]ம்பரிவினாலேயனுப்புவித்துத் தேம்பயிலுங்

[illegible]த[illegible]டன்வீணைகேட்பிக்கும்பேர்களுக்குச்
சா[illegible]ாயுஞ்சாலுவையுந்தான்கொடுத்துப் போத

வெடுத்தபணத்துடனேயேந்தியதுப்பட்டி
கொடுத்துவிடையுங்கொடுத்துத் திடத்துடனே

நட்டுவர்க்குமிக்கானநாலுவகைப்பணியுங்
கட்டுவர்க்கரும்பணமுங்கைக்கொடுத்துக் கெட்டியா

யாடல்புரியுமின்னார்க்கம்பொற்சிலம்புடனே
பாடகமுங்கொப்பும்பலபணியுந் தேடரிய

சேலையுங்கண்டசரமுந்திகழுமுத்து
மாலையுநன்றாய்வரிசைசெய்து நீலக்

கறுப்பிகளுக்கேத்தசந்த்ரகாவிவன்னங்காச்சி
யிறுக்கியபூச்சரிகையிட்டு சிறுக்கு

மிடைக்கிடைபொன்பெற்றதுகிலீந்தாரவுக்கைக்கு
முடைக்குமதுவேயுதவி யடுத்தவர்க்கே

யிச்சைதரச்சிவப்பாமேந்திழைமார்க்கேநீலப்
பச்சையிழைநூலினெய்தபட்டாடை மிச்ச

முகப்பிலரசிலையுமுற்றுஞ்சரிகைத்
தகட்டையழுத்தும்புடைவைதந்து நகத்தினிலே

தட்டுமுலைசற்றுந்தடியாதபெண்களுக்குக்
கட்டுதற்குச்சிற்றுடைக்கண்டங்கி தொட்டணைக்கப்

பாக்கத்தனைமுலையாம்பாவையர்க்குத்தான்கலசப்
பாக்கத்தெழுத்துப்பணிப்புடைவை • நீக்கரிதாய்ச்

சேர்க்குமணிச்செப்பாய்த் திரண்டமுலையார்க்கெ
பார்க்குமிழைப்பீதாம்பரச்சேலை வ

ளசையுங்குடம்போலமையுமுலையார்க்குத்
திசையறிந்தவாளெழுத்துச்சேலை யிசையுஞ்

சரியுமுலைமாதருக்குச்சல்லாமுகப்பிற்
றெரியவிரற்கண்டையிட்டசேலை பெரிதாய்

முலைவிழுந்தமாதருக்குமுக்கம்பிச்சேலை
தலைநரை பேர்க்குவெள்ளைதானே நிலவரமாய்ப்

பேதமில்லாப்பேதைமுதற்பேரிளம்பெண்ணீறாக
மாதரொவர்க்கும்வரிசைசெய்தும் நீதிபரன்

வேந்தரொவர்க்குமவிடைகொடுத்துமங்கையர்கை
யேந்தமகாராசனெழுந்தருள மாந்தர்தொழும்

பாதவெச்சரிகைபராக்கென்றுகட்டியங்கள்
போதவிருபாலும்புகழ்ந்தார்க ளாதரவாய்

ஞாலத்திசைபுரந்தநாதனுக்குக்கண்ணெதிரே
யாலத்தியேந்தினாரயிழைமார் மாலெனவே

யந்தப்புரத்திலரசர்பிரானெய்தினன்
முந்தப்பலமாதர்மொய்த்தீண்டிச் சந்திரகிரி

யாதிபர்க்குச்சோபனமேயாண்டவர்க்குச்சோபனமே
சோதிவடிவாளருக்குச்சோபனமே நீதிதரும்

சோபனமேமிக்கசுபசோபனமேயென்றுநல்ல
சோபனப்பாட்டுநிதித்தார்க டபம்வைத்த

லாலத்திகொண்டுவந்துதலேசுற்றிநின்று
[illegible]ழித்தார்சிலதமார் மட்டில்லாத்

தாதியரும்வேற்றுச்சகலரையும்நிற்கவென
வோதிமணவறையினுட்புகுந்து வேதமுறைக்

கந்தருவர்நன்மணத்திற்கைகலந்தவென்றுடனே
செந்திருவுமாலுமெனச்சிரபடைத்துச் சந்ததமும்

வாழியெனவாழ்த்திமனைபுகுந்தான்மால்கடைந்த
யாழியமுதமருந்துதல்போற் றேழிகே

ளின்பமிருங்காமரசமெங்நேரநீங்காம
லன்பனுடனேயனுபவித்ததே னன்பனுமென்

கன்னத்திற்கன்னம்வைத்துக் கையுடனேகைபொருந்த
வன்னச்சிமிழ்முலேதன்மார்பிறுக வின்னமுத

வாயிதழைவாயில்வைத்துமருவி யுடலந்துவளப்
[illegible]யின்மலர்விரித்தபஞ்சணேமேற் றேயும்

[illegible]வசத்தாற்கட்டிப்பிடிக்கையிலுங்காலா
[illegible]ரவபடத்தையணைத்து விரிவுள்ள

[illegible]ற்கைநெருக்கிக்குடங்கையின்மேலேற்
[illegible]ங்கையிலுங்கைநெகிழாதொன்றாய் [illegible]றங்கிளரு

மன்றிலும்பேடையும்போலாவியுந்தேகமும்போ
லொன்றியிரண்டுடலுமொன்றாக நன்றியுடன்

பொன்னைப்புணர்ந்துபுவியைப்புயந்தாங்கி
யென்னைப்புரந்தவெங்கடேசரெட்ட னன்னய

நித்தியுகல்யாணநிறைவேறக்கூடினு
னுத்தமனேநானுமுளத்திருத்தி மெத்தச்

சுகமுந்தயவும்வரத்தோய்ந்தேனிதுவே
பகருஞ்சுபசோபனம்.

---

## வெண்பா.

வாழிகுமாரவெட்டன்மைந்தன்வெங்கடேசரெட்டன்
வாழிசெகவீரவெட்டமன்னர்பிரான் வாழியவர்
மக்கள்மருமக்களுடன்வாழியரசுரிமை
யொக்கலுடன்வாழியுவந்து

---

காமரசமஞ்சரி

முற்றிற்று.

